# செய்யுளியல் பெயர்க்காரணம்

உலக ஒழுக்கங்களைச் செய்யுளில் கூறுங்கால் எப்படிக் கூறி அமைக்க வேண்டும் என்பதை வற்புறுத்தவே தொல்காப்பியம் இயற்றப்பட்டது. எழுத்து, சொல், பொருள்களால் ஆவது செய்யுள் ஆதலின் எழுத்து பற்றி ஒன்பது இயல்களும், சொல் பற்றி ஒன்பது இயல்களும் பொருள்பற்றி ஒன்பது இயல்களும் ஆக எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் பொருளதிகாரம் என மூன்று பகுதியாக இயற்றப்பட்டது.

# செய்யுளியல் அமைப்பு

தொல்காப்பியம் பொருள் அதிகாரம் வாழ்க்கைப் பாங்கினையும், அதனை வெளிப்படுத்தும் நூலின் பாங்கினையும் உணர்த்துகிறது. முதல் ஆறு இயல்கள் வாழ்க்கைப் பாங்கை உணர்த்துகின்றன. இறுதி மூன்று இயல்கள் தமிழ்நூல் நெறியை உணர்த்துகின்றன. கருத்துகள் உவமத்தால் கூறப்படும்; செய்யுளில் கூறப்படும்; மரபுநெறியைப் பின்பற்றிக் கூறப்படும் என இம்மூன்றும் கூறுகின்றன.

# செய்யுளியல் அமைப்பு

இவற்றுள் தொல்காப்பியம் செய்யுளியல் வாழ்க்கைப் பாங்கை உணர்த்தும் செய்யுளின் இலக்கணத்தை 235 நூற்பாக்களில் விளக்குகிறது. யாப்பியல் வகை என 26 பாங்குகளும், வனப்பு என 8 வகைப் பாங்குகளும் இந்த இயலில் கூறப்படுகின்றன

# செய்யுளியல் பெயர்க்காரணம்

பொருளதிகாரத்தில் அகத்திணையியல் முதல் உவமையியல்வரை ஏழு இயல்களைக் கூறிய தொல்காப்பியர் அவை யாவும் கொள்ளும் செய்யுளைப்பற்றிக் கூறத் தொடங்கினார். எழுத்துச் சொற்பொருள்களாற் செய்யப்படுவது செய்யுளாம். அவையமைந்த செய்யுள் பற்றிய இயல் ஆதலின் இவ்வியல் செய்யுளியல் என்னும் பெயர்த்தாயிற்று. எழுத்துச் சொற்பொருள்கள் பற்றி அல்வவ்வதிகாரத்துள் விளங்கக் கூறினாலும் அவற்றையே செய்யுள் உறுப்புகள் எனக் கொண்டு இச்சூத்திரத்து முப்பத்து நான்கு எனத் தொகை கொடுத்து அம்முப்பத்து நான்கினாலும் வருவது செய்யுள் என்றார் ஆசிரியர் .

# செய்யுள் உறுப்புகள்

மாத்திரை எழுத்து இயல் அசை வகை எனாஅ
யாத்த சீரே அடி யாப்பு எனாஅ
மரபே தூக்கே தொடை வகை எனாஅ
நோக்கே பாவே அளவு இயல் எனாஅ
திணையே கைகோள் கூற்று வகை எனாஅ
கேட்போர் களனே கால வகை எனாஅ
பயனே மெய்ப்பாடு எச்ச வகை எனாஅ
முன்னம் பொருளே துறை வகை எனாஅ
மாட்டே வண்ணமொடு யாப்பு இயல் வகையின்
ஆறு தலை இட்ட அந் நால் ஐந்தும்
அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயைபே புலனே இழைபு எனாஅப்
பொருந்தக் கூறிய எட்டொடும் தொகைஇ
நல் இசைப் புலவர் செய்யுள் உறுப்பு என
வல்லிதின் கூறி வகுத்து உரைத்தனரே. 1

# செய்யுளியல் பெயர்க்காரணம்

“ மாத்திரை ...... உரைத்தனரே

இதன் பொருள் மாத்திரை முதலாக இழைபு ஈறாகக் கூறப்பட்ட முப்பத்து நான்கும் செய்யுட்கு உறுப்பாம் என்றவாறு .

# யாப்பியல் வகை 26

1. மாத்திரை,
2. எழுத்து-இயல்,
3. அசைவகை
4. யாத்த சீர்,
5. அடி,
6. யாப்பு
7. மரபு,
8. தூக்கு,
9. தொடை
10. நோக்கு,
11. பா,
12. அளவு-இயல்
13. திணை,
14. கைகோள்,
15. கூற்று
16. கேட்போர்,
17. களன்,
18. காலவகை
19. பயன்,
20. மெய்ப்பாடு,
21. எச்சம்
22. முன்னம்,
23. பொருள்,
24. துறை
25. மாட்டு,
26. வண்ணம்,

# கூடுதல் - 8

1. அம்மை,
2. அழகு,
3. தொன்மை,
4. தோல்,
5. விருந்து,
6. இயைபு,
7. புலன்,
8. இழைபு

# சொல் விளக்கம்

| யாப்புக் குறியீடு | குறிப்பு |
|---|---|
| மாத்திரை | கண்ணின் திரை மா அளவுக் கால-நொடி நொடிக்கும் கால அலகு |
| எழுத்து | மொழியில் எழும் சிறு ஒலி அலகு |
| அசை | எழுத்துக்கள் இணைந்து அசையும் செய்யுள் அலகு |
| சீர் | அசைகள் இணைந்து சீராக (ஒழுங்காக[4]) நடக்கும் செய்யுள் அலகு. |
| (தளை) | சீர்கள் தளையப்படுவது. |

# சொல் விளக்கம்

| யாப்புக் குறியீடு | குறிப்பு |
|---|---|
| அடி | செய்யுள் உறுப்புகள் ஆறனுள் ஐந்தாவதாக அமைந்த ஒன்று ஆகும். மனிதன், விலங்கு முதலியன அடிகளால் நடக்கின்றன. அடியைப் 'பாதம்' என்கின்றோம். பாட்டும் அடியால் நடத்தல் ஒப்புமை பற்றிப் பாடலடியையும் அமிதசாகரர் 'பாதம்' என்கின்றார். |
| யாப்பு | யாத்தல் என்னும் சொல் கட்டுதல் என்னும் பொருளைஉடையது. எழுத்து, அசை, சீர், தளை, அ டி, தொடை ஆகிய உறுப்புகளை ஒருசேரக் கட்டி அமைப்பது |
| மரபு | முன்னோர் நெறியைப் பின்பற்றும் முறைமை |
| தூக்கு | *பாக்களைத் துணிந்து நிறுக்கும் செய்யுளுறுப்பு* |
| தொடை | *தொடர்பு* |

# சொல் விளக்கம்

| யாப்புக் குறியீடு | குறிப்பு |
|---|---|
| நோக்கு | ஓசை முதலியவற்றால் கேட்டாரை மீட்டுந் தன்னை நோக்கச் செய்யும் செய்யுளுறுப்பு (உரையாசிரியர்கள் விளக்கம்) |
| பா | ஆடை நெய்வோர் நூலைப் பாவாக ஓட்டுவது போல வரிசை வரிசையாகப் பாடலடிகளை இணைத்து ஓட்டிய முறைமை. ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா. வஞ்சிப்பா, மருட்பா முதலான யாப்பு நோக்குப் பாகுபாடுகளும், அங்கதம் முதலான பொருள் நோக்குப் பாகுபாடுகளும் |
| அளவு-இயல் | ஆசிரியப்பா 3-1000 அடி, குறள் வெண்பா 7 சீர், பஃறொடை வெண்பா 5-12 அடி, பரிபாடல் 5-400 அடி, பிறவற்றிற்கு வரையறை இல்லை |
| திணை | அகத்திணை 7, புறத்திணை 7 |
| கைகோள் | களவு, கற்பு என 2 |

# சொல் விளக்கம்

| யாப்புக் குறியீடு | குறிப்பு |
|---|---|
| கூற்று, கேட்போர், களம், காலவகை | அகத்திணை மாந்தர் |
| பயன், மெய்ப்பாடு, எச்சம், முன்னம், பொருள், துறை | அகப்பொருள் பாடல்களுக்குப் பாட்டால் விளையும் பயன், பாட்டினது பொருளால் தோன்றும் நகை முதலான மெய்ப்பாடு, பாட்டின் பயன், பாட்டில் வரும் இறைச்சி முதலானவை, அகப்பொருளா புறப்பொருளா என அறிதல், அவற்றின் துறைகள் ஆகியவற்றை உணர்ந்துகொள்ள வேண்டும் என்று இந்த இயல் கூறுகிறது. |
| மாட்டு | "அகன்று கிடப்பினும் அணுகிய நிலையிற் கிடப்பினும் பொருள்முடியுமாற்றாற் கொண்டு கூட்டிச் சொல் முடிபு கொள்ளும் முறை" (தொல். பொ. 522): வாக்கியத்தை முடிக்கச் சொற்கள் விலகிக் கிடந்தாலும் நெருங்கிக் கிடந்தாலும் பொருள் பொருந்தும்படி ஏற்றுக்கோத்துச் சொல்முடிவு கொள்ளும் முறை" |

# சொல் விளக்கம்

| யாப்புக் குறியீடு | | குறிப்பு | |
|---|---|---|---|
| வண்ணம் 20 | | | |
| 1.அகப்பாட்டு வண்ணம்<br>2.அகைப்பு வண்ணம்<br>3.அளபெடை வண்ணம்<br>4.இயைபு வண்ணம்<br>5.உருட்டு வண்ணம் | 1. எண்ணு வண்ணம்<br>2. ஏந்தல் வண்ணம்<br>3. ஒரூஉ வண்ணம்<br>4. ஒழுகு வண்ணம்<br>5. குறுஞ்சீர் வண்ணம் | 1. சித்திர வண்ணம்<br>2. தாஅ வண்ணம்<br>3. தூங்கல் வண்ணம்<br>4. நலிபு வண்ணம்<br>5. நெடுஞ்சீர் வண்ணம் | 1. பாஅ வண்ணம்<br>2. புறப்பாட்டு வண்ணம்<br>3. முடுகு வண்ணம்<br>4. மெல்லிசை வண்ணம்<br>5. வல்லிசை வண்ணம் |

# சொல் விளக்கம்

| யாப்புக் குறியீடு | குறிப்பு |
| --- | --- |
| | |

1. அம்மை
2. அழகு
3. தொன்மை
4. தோல்
5. விருந்து
6. இயைபு
7. புலன்
8. இழைபு

# எண்வகை வனப்புகளில் அமையும் நூல்களுக்குச் சான்றுகள்:

1) **அம்மை** - திருக்குறள், ஆத்திசூடி.

2) **அழகு** - நெடுந்தொகை போன்றவை

3) **தொன்மை** - சிலப்பதிகாரம் (நச்சினார்க்கினியர்), இராம சரிதம், தகடூர் யாத்திரை.

4) **தோல்** - மலைபடுகடாம் (இளம்பூரணர்)

5) **விருந்து** - முத்தொள்ளாயிரம் (பேராசிரியர்)

6) **இயைபு** - மணிமேகலை, பெருங்கதை

7) **புலன்** - முக்கூடற்பள்ளு, குறவஞ்சி, ஏற்றப்பாட்டு, குழந்தைப் பாடல்கள்

8) **இழைபு** -கலித்தொகை, பரிபாடல் (பேராசிரியர்)

# மாத்திரையும் எழுத்து இயலும்

அவற்றுள்,

மாத்திரை வகையும் எழுத்து இயல் வகையும்

மேல் கிளந்தனவே என்மனார் புலவர். 2

# மாத்திரையும் எழுத்து இயலும்

மேற்சொல்லப்பட்ட செய்யுள் உறுப்புகள் முப்பத்து நான்கனுள் மாத்திரை அளவும் எழுத்துகளை இயற்றி (அமைத்து)க் கொண்ட வகையும் ஆகிய இரண்டும் இச்செய்யுளியலில் எழுத்ததிகாரத்திற் சொல்லப்பட்டவற்றின் வேறுபாடுடையன போல் தோன்றினாலும் ஆங்குச் சொல்லப்பட்டனவற்றின் வேறுபட்டனவல்ல ; அவையேயாம் என்று சொல்லுவர் புலவர் என்றவாறு , அதாவது , ஐகார ஔகாரங்கள் இரண்டு மாத்திரை பெறும் என்றாலும், செய்யுளில் அதனிற் குறையும் என்பதும்; எழுத்துக்கள் யாவும் தனித்தனி மாத்திரையளவுடையன என்றாலும், மெய்யெழுத்துகள் தனித்து அசை நிலையடைவதின்றி முன்ன ருள்ள

# மாத்திரையும் எழுத்து இயலும்

எழுத்தோடிணைந்தே வரும் என்பதும்; அளைெ◌ட எழுத்துக்குத் தனித்து மாத்திரை கூறப்படினும், எழுத்து நிலையில் நெடில் தனி எழுத்தாகவும் அதன் அளவாகிய குறில் தனி எழுத்தாகவும் இயற்றிக் கொள்ளப் படுதலும்; ஆய்தம் ஒருகால் மெய் போலவும் ஒருகால் உயிர்போலவும் (அசைப்படுத்துங்கால்) கொள்ளப்படுதலும் ஆகிய மாறுபாடு கூறப்படினும் மாத்திரை யளவும் எழுத்து வகைகளும் எழுத்ததிகாரத்துக் கூறப்பட்ட இலக்கணங்களில் மாறுபடுவனவல்ல என்பதாம் .

# நேரும் நிரையும்

குறிலே நெடிலே குறில் இணை குறில் நெடில்

ஒற்றொடு வருதலொடு மெய்ப் பட நாடி

நேரும் நிரையும் என்றிசின் பெயரே. 3

# நேரும் நிரையும்

தனிக்குறிலும் தனிக்குறில் ஒற்றும், தனிநெடிலும் நெடில் ஒற்றும் நேரசையாம். குறில்இணையும் குறிலிணை யொற்றும், குறில்நெடிலும் குறில் நெடில் ஒற்றும் நிரையசையாம்.

உதாரணம் :

க , கல் , ஆ , ஆல் , பல , பலன் , பலா , பலாம்.

# உரியசை - நேர்பு நிரைபு

இரு வகை உகரமொடு இயைந்தவை வரினே

நேர்பும் நிரைபும் ஆகும் என்ப

குறில் இணை உகரம் அல் வழியான. 4

# உரியசை - நேர்பு நிரைபு

நேர் நிரை என்பன குற்றியலுகரம் முற்றியலுகரம் ஆகிய இரண்டோடும் வரின் அவை நேர்பசை நிரைபசை எனப்படும். அவையிரண்டும் தனிக்குற்றெழுத்தோடு சேராதவிடத்தே அவ்வாறாம் .

உ - ம் : கன்று, காடு, காட்டு, அம்மு, காமு, ஆய்வு நேர்பசை.

உலகு, உணக்கு, இராது, பனாட்டு, உலவு, உரிஞ்ஞு, உலாவு , விடாய்வு, நிரைபசை

# இயலசை - உரியசை

இயலசை முதல் இரண்டு ஏனவை உரியசை. 5

# இயலசை - உரியசை

நேர் நிரை என்பன இயலசை; நேர்பு நிரைபு என்பன உரியசை. இயல்பில் அமைந்த அசை இயலசை; அசைக்கு உரிமையாக்கப்பட்ட அசை உரியசை; பொருளுக்கு உரிமையாக் கப்பட்ட சொல் உரிச்சொல் எனவும், திணைக்கு உரிமையாக்கப்பட்ட பொருள் உரிப்பொருள் எனவும் பட்டமை போல.

# தனிக்குறில் மொழி முதலில் அசையாகாமை

தனிக் குறில் முதலசை மொழி சிதைந்து ஆகாது.6

# தனிக்குறில் மொழி முதலில் அசையாகாமை

மொழி முதலில் உள்ள தனிக்குறில் நேரசையாகாது. அடுத்த எழுத்து மெய்யாயின் நேரசையாம் குறிலோடு நெடில் இருப்பின் சேர்ந்து நிரையாம் என்றவாறு.

உ - ம்: உலகு என்பது உ , லகு எனப் பிரியாது உலகு எனப் பிரியும்.

# குற்றியலிகரம் மெய் இயல்பினது

ஒற்று எழுத்து இயற்றே குற்றியலிகரம். 7

# குற்றியலிகரம் மெய் இயல்பினது

செய்யுளில் வரும் குற்றியலிகரம் மெய்யெழுத்தின் இயல்புடையதாகி அலகு பெறாது,

அருளல்ல தியாதெனின் கொல்லாமை கோறல்

பொருளல்ல திவ்வூன் தினல்.

# குற்றியலிகரம் மெய் இயல்பினது

இதில் அருளல்ல என்பது புளிமாங்காய்ச்சீர். காய்முன் நிரை வருதல் வெண்பாவுக்குரியது அன்று. ‘தியாதெனின் என்பதில் தியா என்பது நிரை. ஆதலின் தி எனும் குற்றியலிகரத்தை மெய்போலக்கொண்டு அலகிடாது விட யாயென நேர் வந்தது காணலாம்.

# முற்றியலுகரம் மொழி சிதைக்கப்படாமை

முற்றியலுகரமும் மொழி சிதைத்துக் கொளாஅ

நிற்றல் இன்றே ஈற்று அடி மருங்கினும். 8

# முற்றியலுகரம் மொழி சிதைக்கப்படாமை

முற்றியலுகரமும் உம்மையாற் குற்றியலுகரமும் மொழிசிதைத்து அலகிடப் படா; அடியிறுதியிலும் சிதைந்து நிற்றல் இல்லை.

உ - ம்: அங்கண் மதியம் அரவுவாய்ப் பட்டென - இதில் அரவு வாய் எனப் பிரிப்பின் சொற்சிதையாமையின் அதன் நிரைபு நேர் என அசை கூட்டலாம். “பெருமுத் தரையர் பெரிதுவந் தீயும் (நாலடி -200) இதில், முத்தரையர் என்பதுடன் சேர்த்துச் சீராக்க வேண்டிப் பெருமுத் தரையர் எனச் சிதைக்கப் பட்டதனால் பெருமு என்பதை முற்றியலுகர வீறாகக் கொள்ளல் கூடாது.

# முற்றியலுகரம் மொழி சிதைக்கப்படாமை

சேற்றுக்கால் நீலம்" - இதில் சேற்று என்பதைக் குற்றியலுகரமாகக் கொண்டு கால் என்பதுடன் நேர்பு நேர் என வந்ததாகக் கொள்ளலாம்.

என்து ணையை ஏற்க நன்றே - இதில் துணையை என்பதின் துவ்வை என் என்பதுடன் சேர்த்து என்து எனக் குற்றியலுகர மாக்கல் கூடாது . இது மொழி சிதைத்ததாம்.

# இருவகை யுகரமும் ஒற்றடுத்தல்

குற்றியலுகரமும் முற்றியலுகரமும்

ஒற்றொடு தோன்றி நிற்கவும் பெறுமே. 9

# இருவகை யுகரமும் ஒற்றடுத்தல்

குற்றியலுகரமும், தம்முன்னர் மெய்யெழுத்து வரவும் பெறும். வரினும் நேர்பசை நிரைபசையாம்,

உ.ம் : சேற்றுக்கால் நீலம் "கனவுக்கொல் நீண்டது" - இவ்வொற்றுகள் புணர்ச்சி விதியால் வருவன. இயல்பில் வருவனவல்ல.

# அசை , சீர் கொள்ளும் விதம்

அசையும் சீரும் இசையொடு சேர்த்தி

வகுத்தனர் உணர்த்தல் வல்லோர் ஆறே. 10

# அசை, சீர் கொள்ளும் விதம்

அசைகளையும் சீர்களையும் ஓசையோடு பொருத்தி சீர்களை வகுத்துணர்த் தலும் செய்யுள் வல்லார் நெறியாம், அதாவது சொற்களைச் சிதைத்தும் சீர்கொள்ளலாம்.

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்

நிலமிசை நீடுவாழ் வார் (குறள்-3)

இதில் வாழ்வார் எனும் சொல் சீர்பொருத்தத்துக்கேற்ப நீடுவாழ்வார் எனப் பிரித்தமை காண்க . நீடுவாழ் சீராகவும் வார் அசையாகவும் ஆயின.

# சீர் – சீராகும் விதம்

ஈர் அசை கொண்டும் மூ அசை புணர்த்தும்

சீர் இயைந்து இற்றது சீர் எனப்படுமே. 11

# சீர் – சீராகும் விதம்

இரண்டசைகளால் ஓசை நிறைந்தும் மூன்றசைகளால் ஓசை நிறைந்தும் முடிவது சீர் எனப்படும்,

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார் நிலமிசை நீடுவாழ் வார்

இது ஈரசைச் சீர்களாலானது

யாதானு நாடாமா லூராமா லென்னொருவன் சாந்துணையும் கல்லாத வாறு

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅ ரெனின்

இவற்றில் ஈரசைச் சீர்களும் மூவசைக் சீர்களும் வந்தன.

# இயற்சீரும், ஆசிரிய உரிச்சீரும்

இயலசை மயக்கம் இயற்சீர் ஏனை

உரியசை மயக்கம் ஆசிரிய உரிச்சீர். 12

# இயற்சீரும், ஆசிரிய உரிச்சீரும்

நேர் நிரை எனும் இயலசைகள் மயங்கி வருவன இயற்சீர் எனப்படும்; நேர்பு நிரைபு எனும் உரியசைகள் மயங்கி வருவன ஆசிரியவுரிச்சீர் எனப்படும்,

நேர் நேர், நேர் நிரை, நிரைநேர், திரை நிரை - இயற்சீர்.

மலர்மிசை ஏகினான் என்னும் குறளில் காண்க.

# இயற்சீரும், ஆசிரிய உரிச்சீரும்

நேர்பு நேர்பு, நேர்பு நிரைபு, நிரைபு நேர்பு, நிரைபு நிரைபு ஆசிரியவுரிச்சீர்.

"வெளிற்றுப் பனந்துணியின் வீற்றுவீற்றுக் கிடப்ப" (புறம் 36)

வீற்று வீற்று- நேர்பு நேர்பு.

“பூண்டு கிடந்து வளரும் பூங்கட் புதல்வன்" (அகம் 96)

பூண்டு கிடந்து - நேர்பு நிரைபு.

# இயற்சீரும், ஆசிரிய உரிச்சீரும்

" நறவுண் மண்டை நுடக்கலி னிறவுக்கலித்து ( அகம் . 96 )

இறவுக்கலித்து- நிரைபு நிரைபு.

“வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு , நிமிர்தோள் " ( திருமுருகு . 106.

வசிந்து வாங்கு - நிரைபு நேர்பு .

# உரியசைப்பின் நிரை

முன் நிரை உறினும் அன்ன ஆகும். 13

# உரியசைப்பின் நிரை

உரியசை முன்னர் நிரையசை சேர்ந்து வரினும் உரியசை மயக்கம் எனக்கொண்டு ஆசிரியவுரிச்சீராகும்.

நேர்பு நிரை நிரைபு நிரை என்பன அவை.

உ - ம்: நீடுகொடி, நாணுத்தளை;

உரறுபலி, விரவுத்தலை.

# உரியசைப்பின் நேர்

நேர் அவண் நிற்பின் இயற்சீர்ப் பால. 14

# உரியசைப்பின் நேர்

நேர்பு நிரைபு முன்னர் நேர் அசைவரின் அவ் விரண்டும் இயற்சீர்ப் பகுதியவாம்,

நேர்பு நேர், நிரைபு நேர்.

உ - ம் : ஆற்றுக்கால், குளத்துக்கால்.

உரியசைப் பின்னர் நிரைவரின் ஆசிரியவுரிச்சீராம் என்பதும்,

அவற்றின் பின்னர் நேர்வரின் இயற்சீர்ப் பாலவாம் என்பதும்,

ஆசிரியர் ஆணை எனக் கொள்க. பின்னர் இனிவரும் விதிகளும் அன்ன.

# இயலசைப்பின் உரியசை

இயலசை ஈற்று முன் உரியசை வரினே

நிரையசை இயல ஆகும் என்ப. 15

# இயலசைப்பின் உரியசை

நேர் நிரை என்னும் இயலசையிறுதியில் நேர்பு நிரைபு என்னும் உரியசை யிரண்டும் வரின் அவை நிரையசைப் பாற்படும் என்ப.

உ-ம்: போரேறு
நன்னாணு } — இது நேர் நேர்பு

பூமருது
காருருமு } — நேர் நிரைபு — இதை

கடியாறு
பொருநாறு } — நிரை நேர்பு

மழகளிறு
நரையுருமு } — நிரை நிரைபு

இந்நான்கையும் நேர் நிரையாகவும் நிரை நிரையாகவும் கொள்க.

# அளபெடை அசைநிலையாதல்

அளபெடை அசைநிலை ஆகலும் உரித்தே. 16

# அளபெடை அசைநிலையாதல்

அளபெடை எழுத்து அசை நிலையாகலும் உரியது; ஆகாமையும் உரியது.

உ - ம் : நற்றாள் தொழா அ ரெனின்- இதில் அளபெடை அகரம் அசை நிலையாயிற்று .

“ உப்போ ஒ எனவுரைத்து மீள்வாள் ஒளிமுறுவற்

கொப்போ நீர் வேலி யுலகு " - இதில் உப்போஒ

என்பதன் ஒகரம் அசை நிலை பெறவில்லை.

# ஒற்றளபெடுப்பினும்

ஒற்று அளபெடுப்பினும் அற்று என மொழிப. 17

# ஒற்றளபெடுப்பினும்

ஒற்றெழுத்து அளபெடுத்தாலும் உயிரளபெடை போல அசைநிலை ஆகலும் ஆகாமையயும் உரித்து என மொழிய ,

கண்ண டண்ண்ணெனக் கண்டும் கேட்டும் (மலைபடு . 352)

இதில் கண்ண் என்பது நேர் நேர் எனவும், டண்ண்ணென என்பது நேர் நிரை எனவும் அசை நிலை பெற்றும் பெறாதும் வந்தது காண்க.

# வெண்பாவுரிச்சீர்

இயற்சீர் இறுதி முன் நேர் அவண் நிற்பின்

உரிச்சீர் வெண்பா ஆகும் என்ப. 18

# வெண்பாவுரிச்சீர்

ஈரசைச் சீர்களாகிய தேமா புளிமா கூவிளம் விளம் என்பனவற்று முன் நேர்வரின் அவை வெண்பா வுரிச்சீராம்.

வாய்பாடு: தேமாங்காய், புளிமாங்காய், கூவிளங்காய், கருவிளங்காய் எனக் கொள்க. காய்ச்சீர்கள் யாவும் வெண்பாவுரிச் சீர்களாம்.

# வஞ்சிச் சீர்

வஞ்சிச் சீர் என வகை பெற்றனவே

வெண் சீர் அல்லா மூஅசை என்ப. 19

# வஞ்சிச் சீர்

வெண்பாவுரிச் சீராகிய காய்ச்சீரல்லாத நிரையிறுதி வந்த கனிச்சீர்கள் வஞ்சியுரிச்சீர் எனப்படும்.

தேமாங்கனி, புளிமாங்கனி, கூவிளங்கனி, கருவிளங்கனி எனக்கொள்க.

# வஞ்சிச் சீர் மரபு

**தன் பா அல் வழி தான் அடைவு இன்றே. 20**

# வஞ்சிச் சீர் மரபு

வஞ்சியுரிச்சீர்கள் தமக்குரிய வஞ்சிப்பாவில் அல்லது வெண்பா ஆசிரியம் கலி என்பவற்றுள் வாராது.

# வஞ்சிப் பாவில் பிற சீர்

வஞ்சி மருங்கின் எஞ்சிய உரிய. 21

வஞ்சிப்பாவில் பிற எல்லாச் சீர்களும் வரப்பெறும்.

# புறனடை

**வெண்பா உரிச்சீர் ஆசிரிய உரிச்சீர்**

**இன் பா நேரடிக்கு ஒருங்கு நிலை இலவே. 22**

# புறனடை

வெண்பாவுரிச் சீராகிய காய்ச்சீரும் ஆசிரியவுரிச் சீர்களும் வெண்பாவின் நேரடிக்கு ஒருங்கு சேர்ந்து நில்லா. பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கட்டளை ஆசிரியத்துக்கு இல்லை என்பர். சூத்திரத்தில் அவ்வாறில்லாமையின் வெண்பாவுக்கில்லை என்பதே நன்று. இன்பா என்பதற்கு வெண்பா என இளம்பூரணர் கொண்டதே ஏற்புடைத்து.

# கலித்தளை

கலித்தளை மருங்கின் கடியவும் பெறாஅ. 23

கலித்தளையடிக்கும் அவ்விருசீரும் ஒருங்கு நிற்றல் கடியப்படும். உம்மையால் கடியப்படா என்பதும் ஆம்.

# கலிப்பாவில் இயற்சீர்கள் நில்லா

கலித்தளை அடிவயின் நேர் ஈற்று இயற்சீர்

நிலைக்கு உரித்து அன்றே தெரியுமோர்க்கே. 24

# கலிப்பாவில் இயற்சீர்கள் நில்லா

**கலித்தளையால் வரும் கலிப்பாவின் நேரடியால் தேமா புளிமா என்னும் இயற்சீர்கள் நிற்றற் குரியவல்ல செய்யுள் ஓசை தெரியுமவர்க்கு.**

# வஞ்சியில் இறுதி நில்லா

**வஞ்சி மருங்கினும் இறுதி நில்லா 25**

**வஞ்சிப்பாவின் அடியிறுதிக்கண் நேரீற்றியற் சீர்கள் நில்லா.**

# அசையும் சீராதல்

**இசைநிலை நிறைய நிற்குவது ஆயின்**

**அசைநிலை வரையார் சீர் நிலை பெறவே. 26**

# அசையும் சீராதல்

நேர் , நிரை , நேர்பு , நிரைபு எனும் அசைகள் செய்யுளில் இசை நிலையை நிறைக்க வேண்டி நிற்குமாயின் அவற்றையும் சீர் நிலை பெறும் என ஏற்பர். அவை நாள், மலர், காசு, பிறப்பு எனும் வாய்பாட்டில் வரும்.

# அசையும் சீராதல்

“அரிமதர் மழைக் கண்ணால்”

“பெருமதி செய் தீமையால்"

மழை என நிரையசை சீராயவாறும், செய் என நேரசை சீராயவாறும் காண்க .

வெண்பா வீற்றில் காசு பிறப்பு வரும்.

" புகழ் புரிந்தார் மாட்டு

- மாட்டு காசு வாய்பாடு நேர் பசை

முதற்றே யுலகு

- பிறப்பு வாய்பாடு - நிரைபசை.

# அசைச்சீர் இயற்சீர் போறல்

**இயற்சீர்ப் பாற்படுத்து இயற்றினர் கொளலே**

**தளை வகை சிதையாத் தன்மையான. 27**

# அசைச்சீர் இயற்சீர் போறல்

மேற்கூறிய அசைச்சீர்களைத் தளைவகை சிதையாதபடி இயற்சீர்ப்பாற் படுத்துக.

அரிமதர் மழைக் கண்ணாள் என்பதில் மழை என்னும் நிரையசையை நிரையிறுதி இயற்சீர் போலக் கொண்டு மழைக்கண் என்பதை இயற்சீர் வெண்டளையாகக் கொள்க.

பெருமதி செய் தீமையால் என்பதில் செய் என்னும் நேரசையை நேர் இறுதி இயற்சீர் போலக் கொண்டு செய்தீ என்பதை நேரொன்றாசிரியத் தளையாகக் கொள்க.

# வெண்சீரின் இயல்பு

**வெண்சீர் ஈற்றசை நிரையசை இயற்றே. 28**

# வெண்சீரின் இயல்பு

வெண்பாச் சீரின் இறுதியசை நிரையசை இயல்பினதாய் நிற்கும். இது வெண்பாவில் வரும் காய்ச்சீர் நிரையசையிறுதி போலக் கொண்டு அலகிடப்படும் என்கின்றது. நிரையசை முன் நேர்வருவது வெண்பாத் தளையாம் . அவ்வாறே காய்ச்சீர் முன்னர் நேர்வருவதும் வெண்பாத் தளையாம். அதனால் காய்ச்சீர் நிரையசையிறுதியைப் போலும் என்க.

# வெண்சீரும் ஆசிரிய அடியும்

இன் சீர் இயைய வருகுவது ஆயின்

வெண்சீர் வரையார் ஆசிரிய அடிக்கே. 29

# வெண்சீரும் ஆசிரிய அடியும்

இனிய ஓசை பொருந்த வரும் ஆசிரியவடிக்கண் வெண்சீரும் வரப்பெறும்.

(எ - டு) இமிழ்கடல் வளைஇய வீண்டகன் கிடக்கைத்
தமிழ்தலை மயங்கிய தலையாலங்கானத்து. ( புறம் -19 )

என்றவழித் தலையாலம் என ஆசிரியவடியுள் இன்சீர் இயைய வெண்சீர் வந்தது.

# வெண்சீரும் ஆசிரிய அடியும்

இனிய ஓசை பொருந்தவரும் ஆசிரியப்பா வடியில் வெண்சீராகிய காய்ச்சீரும் வரப் பெறும்.

தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து (புறம் 19)

இஃது ஆசிரியவடி தலையாலங் எனக் காய்ச்சீர் வந்தது.

# வஞ்சி உரிச்சீர்

அந்நிலை மருங்கின் வஞ்சி உரிச்சீர்

ஒன்றுதல் உடைய ஓர் ஒரு வழியே. 30

இன்சீர் பொருந்தவருமாயின் வஞ்சியுரிச்சீராகிய கனிச்சீரும் ஆசிரியவடியில் ஒரோ வோரிடத்து வரும்.

# அடி - அடியுமாறு

நாற் சீர் கொண்டது அடி எனப்படுமே. 31

நாற்சீர் கொண்டது அடி எனப்படும்- என்று சிறப்பித்துச் சொல்லப்படும். இதனால் இரண்டு மூன்று சீர்களானும் நாற்சீரின் மிக்க சீர்களானும் அடி வரப்பெறும் என்பதும் கூறப்பட்டதாம்.

# அடியில் தளை தொடை

அடி உள்ளனவே தளையொடு தொடையே. 32

தளையும் தொடையும் கொள்ளப்படுவன நாற்சீரடிக் கண்ணேயாம்.

# புறனடை

அடி இறந்து வருதல் இல் என மொழிப. 33

தளையும் தொடையும் நான்கு சீரடியில் வருவதல்லது அதனின் மிக்க சீரடிகளில் வருதலில்லை.

# அடியால் பாட்டு

அடியின் சிறப்பே பாட்டு எனப்படுமே. 34

பாட்டு (செய்யுள்) என்பது அடியின் சிறப்பாலேயே கூறப்படுவதாம்.

பாட்டு : வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி என்பன.

# அடியின் எழுத்து வரையறை - குறளடி

நால் எழுத்து ஆதி ஆக ஆறு எழுத்து

ஏறிய நிலத்தே குறளடி என்ப. 35

நான்கெழுத்து முதலாக ஆறெழுத்தின்காறும் உள்ள மூன்று நிலம் உடையது குறளடி எனப்படும்.

# சிந்தடி

ஏழ் எழுத்து என்ப சிந்தடிக்கு அளவே

ஈர் எழுத்து ஏற்றம் அவ் வழியான. 36

ஏழெழுத்து முதல் ஒன்பதெழுத்து முதல் வரையுள்ள மூன்று

நிலம் உள்ளது சிந்தடி எனப்படும்.

# நேரடி

பத்து எழுத்து என்ப நேரடிக்கு அளவே

ஒத்த நால் எழுத்து ஏற்றலங்கடையே. 37

பத்தெழுத்து முதல் பதினான்கெழுத்து வரையுள்ள ஐந்து நிலம் உடையது நேரடி எனப்படும்.

# நெடிலடி

மூ ஐந்து எழுத்தே நெடிலடிக்கு அளவே

ஈர் எழுத்து மிகுதலும் இயல்பு என மொழிப. 38

பதினெந்தெழுத்து முதலாகப் பதினேழ் எழுத்தீறாகவுள்ள மூன்று நிலம் உடையது நெடிலடி எனப்படும்.

# கழி நெடிலடி

மூ ஆறு எழுத்தே கழிநெடிற்கு அளவே

ஈர் எழுத்து மிகுதலும் இயல்பு என மொழிப. 39

பதினெட்டெழுத்து முதலாக இருபது எழுத்தீறாகவுள்ள மூன்று நிலம் உடையது கழி நெடிலடி எனப்படும் .

# சில பொது விதிகள்

எழுத்தெண்ணுங்கால் ஒற்றும் குற்றியலுகரமும் குற்றிய லிகரமும் ஆய்தமும் நீக்கி எண்ணுதல் வேண்டும்.

உ - ம்: போந்து போந்து சார்ந்து நாலெழுத்து.

தேர்ந்து தேர்ந்து மூசி நேர்ந்து  ஐந்தெழுத்து.

இப்படியே பிறவரினும் கொள்க.

# சில பொது விதிகள்

எழுத்தால் அடிவரையறை கூறியது போலச் சீராலும் அடி வரையறை கூறுதல் உண்டு.

இரண்டு சீர் கொண்டது குறளடி. மூன்று சீர் கொண்டது சிந்தடி. நான்கு சீர் கொண்டது நேரடி அல்லது அளவடி, ஐந்து சீர்கொண்டது நெடிலடி. ஆறுசீர்க்கு மேற்பட்டன கழிநெடிலடி. அறுசீர்க் கழி நெடிலடி முதலியவாகப் பெயர் பெறும்.

# சீருக்கு எழுத்து வரையறை

சீர் நிலைதானே ஐந்து எழுத்து இறவாது

நேர் நிலை வஞ்சிக்கு ஆறும் ஆகும். 40

# சீருக்கு எழுத்து வரையறை

சீர் நிலைக்குரிய எழுத்து ஐந்தெழுத்தின் மிகாது; இது நேர் இறுதி யாவதாம். நிரையிறுதியாகவரின் அது வஞ்சிச் சீர்க்காம். மற்றைப் பாடல்களுக்கு ஐந்தெழுத்துச் சீரேயுரியவாம். எனவே இருபது எழுத்தே நாற்சீரடிக்கு எல்லை. வஞ்சியடி முச்சீரே எல்லையாக வருதலின் பதினெட்டெழுத்தளவில் ஆம் இருசீரடியாயின் பன்னிரண்டெழுத்து வஞ்சிக்கு எல்லையாம்.

# சீர்மரபு

எழுத்து அளவு எஞ்சினும் சீர் நிலைதானே

குன்றலும் மிகுதலும் இல் என மொழிப. 41

# சீர்மரபு

பாக்களில் அடிகள் பல தொடுக்கும் வழி ஓரடிக்கு ஓரடி எழுத்துகள் குறையினும் (உம்மையால் மிகுமாயினும்) சீர் நிலை குறைதலும் மிகுதலும் இல்லை என மொழிப,

உ - ம் .. போந்து போந்து சார்ந்து சார்ந்து

தேர்ந்து தேர்ந்து மூசி நேர்ந்து

இவ்வடிகளில் முதலடியை நோக்கப் பின்னடி எழுத்தெண்ணிக்கையில் மிக்கதாயினும் சீர் நிலையில் நான்கேயாவது காண்க. இப்படியே பிறவும்.

# எண்ணப்படா எழுத்து

உயிர் இல் எழுத்தும் எண்ணப்படாஅ

உயிர்த் திறம் இயக்கம் இன்மையான. 42

# எண்ணப்படா எழுத்து

உயிரும் உயிரேறிய ஒற்றும் (உயிர்மெய்யும்) அல்லாத எழுத்துகளான மெய்யெழுத்தும், குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தமும் ஆகிய எழுத்துகள் அடிவரையில் எண்ணப்படா,

# வஞ்சியடி

வஞ்சி அடியே இரு சீர்த்து ஆகும். 43

வஞ்சியடி இருசீரடியாகும். முச்சீரான்வரும் என்பது பின்னர்க் கூறப்படும்.

# வஞ்சியடிச்சீரின் சிறுமை

**தன் சீர் எழுத்தின் சின்மை மூன்றே. 44**

# வஞ்சியடிச்சீரின் சிறுமை

வஞ்சிச்சீர்க்கு எழுத்தின் சிறுமை மூன்றே. இது குற்றியலுகரம் வரும்சீர் எனக் கோடல் சிறந்ததாம். “கொன்றுகோடு நீடு கொலைக்களிறு கடாஅய்”

இது முச்சீர் வஞ்சியடி, முதற்சீரில் குற்றுகரங்களையும் ஒற்றுக்களையும் நீக்கின் மூன்றெழுத்தேயுண்மை காண்க.

# வரும் இடன்

முச் சீரானும் வரும் இடன் உடைத்தே. 45

# வரும் இடன்

வஞ்சியடி இருசீரான் வருவதேயன்றி முச்சீரானும் வரும் இடம் உடைய தாம்.

உ - ம் : முன்னர்க் காட்டப்பட்டது.

# அசை கூன் ஆதல்

அசை கூன் ஆகும் அவ்வயினான. 46

# அசை கூன் ஆதல்

வஞ்சியின் இருவகையடிகளிலும் அசை கூனாக வருதலும் உண்டு. உ - ம்: அடி, அதர்சேறலின் அகம்சிவந்தன அடி முதலில் அடி எனும் அசை கூனாயிற்று. “கலங்கழா அலிற், றுறை, கலக்கா னாதே” - துறை என்பது அடியிடையில் கூனாயிற்று. "மாவழங்கலின் மயக்குற்றன, வழி” - வழி அடியிறுதியில் கூனாயிற்று.

# சீர் கூன் ஆதல்

**சீர் கூன் ஆதல் நேரடிக்கு உரித்தே. 47**

# சீர் கூன் ஆதல்

சீர்கூனாக வருதல் நேரடிக்கேயுரித்தாம்.

உவக்காண்,

சுரந்தானா வண்கைச் சுவணமாப் பூதன்

# ஐவகையடியின் விரி

ஐவகை அடியும் விரிக்குங் காலை

மெய்வகை அமைந்த பதினேழ் நிலத்தும்

எழுபது வகையின் வழுவில வாகி

அறுநூற் றிருபத் தைந்தா கும்மே 48

# ஐவகையடியின் விரி

குறளடி முதலான ஐந்து அடிகளையும் விரித்துச் சொல்லுமிடத்து , எழுத்து வகையான் நாலெழுத்து முதலாக அமைந்த பதினேழு நிலத்திலும் எழுபது வகையான இருசீர் புணரும் புணர்ச்சி வகை எழுபதும் குற்றமிலவாய் அறுநூற்றிருபத்தைந்தடியாம், இதன் விரிவை உரையாசிரியர்களின் உரைகளிற் காண்க .

# ஐவகையடியின் விரி

இவ்வகையால் தளை ஏழு பாகுபட்டன: இவை நேரொன்றா சிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை, இயற்சீர் வெண்டளை, வெண்சீர்வெண்டளை, கலித்தளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாத வஞ்சித்தளை என ஏழு வகையாம்..

# ஐவகையடியின் விரி

அவ்வழி ஓரசைச்சீர் இயற்சீர்ப் பாற்படும். ஆசிரிய வுரிச்சீரு மதுவேயாம். மூவசைச் சீருள் வெண்பாவுரிச்சீ ரொழிந்தனவெல்லாம் வஞ்சியுரிச்சீராம். அவ்வழி இயற்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையொடு நேராய் ஒன்றுவது நேரொன்றாசிரியத்தளையாம்; நிரையாய் ஒன்றுவது நிரையொன்றாசிரியத் தளையாம்; மாறுபட்டு வருவது இயற்சீர் வெண்டளையாம்; வெண்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையொடு ஒன்றுவது வெண்சீர் வெண்டளையாம்; நிரையா யொன்றிற் கலித்தளையாம்.

# ஐவகையடியின் விரி

வஞ்சியுரிச்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையோடு ஒன்றுவது ஒன்றிய வஞ்சித்தளையாம். ஒன்றாதது ஒன்றா வஞ்சித்தளையாம். இவ்வகையால் தளை ஏழாயின. இவ்வாறாகி வருதல் வருகின்ற சூத்திரங்களானுணர்க. இனி அடி அறுநூற்றிருபத்தைந்தாமாறு: அசைச்சீர், இயற்சீர், ஆசிரியவுரிச்சீர், வெண்சீர், வஞ்சியுரிச்சீர் என்னும் ஐந்தினையும் நிறுத்தி இவ்வைந்து சீரும் வருஞ்சீராகவுறழும்வழி இருபத்தைந்து விகற்பமாம்.

# ஐவகையடியின் விரி

அவ்விருபத்தைந்தின்கண்ணும் மூன்றாவது ஐந்துசீரையும் உறழ நூற்றிருபத்தைந்து விகற்பமாகும். அந்நூற்றிருபத்தைந்தின் கண்ணும் நான்காவது ஐந்துசீரையும் உறழ அறுநூற்றிருபத் தைந்தாம் என்றவாறு.

# அளவிறந்தன

358. ஆங்ஙனம் விரிப்பின் அளவு இறந்தனவே

பாங்குற உணர்ந்தோர் பன்னும் காலை. 49

# அளவிறந்தன

நெடிலடியும் கழிநெடிலடிகளும் அளவடியைப் போல

எண்ணி விரிப்பின் அளவுகடந்தனவாம்; இலக்கணம் உணர்ந்தோர்.

# ஆசிரியப்பாவுக்குரிய அடி

359. ஐவகை அடியும் ஆசிரியக் குரிய. (50)

# ஆசிரியப்பாவுக்குரிய அடி

குறளடி முதலாக நெடிலடி யிறுதியாகவுள்ள ஐவகையடியும் ஆசிரியப்பாவுக்குரியன

# ஆசிரியப்பாவுக்குரிய அடி

360. விராஅய் வரினும் ஒரூஉநிலை இலவே. (51)

# ஆசிரியப்பாவுக்குரிய அடி

மேற்கூறப்பட்ட குறளடி முதலியன ஆசிரியப்பாவில் பிற தளை விரவிவரினும் நீக்கும் நிலைமையில்லை.

# தளைமரபு

361. தன் சீர் வகையினும் தளை நிலை வகையினும்

இன் சீர் வகையின் ஐந்து அடிக்கும் உரிய

தன் சீர் உள்வழித் தளை வகை வேண்டா. 52

# தளைமரபு

இனிய ஓசைவகையான் ஒவ்வொரு பாவிலும் தன்சீர் வகையானும் தன்தளைவகையானும் குறள், சிந்து, அளவு, நெடில், கழி நெடில் எனும் ஐந்தடிக்கும் உரியனவுரியவாம்.

# தளைமரபு

அதாவது வெண்பா முதலிய நான்கு பாவிலும் வரும் ஐந்து வகையான அடிகளும் அவ்வப் பாவுக்குரிய தன்சீரும் தன்தளையும் உரியவாம் என்றவாறு.

# தளைமரபு

வெண்பாவுக்குத் தன்சீரான காய்ச்சீரே வரும்வழி அதற்கு வெண்டளை வகை கூற வேண்டா. வஞ்சிப்பாவுக்குக் கனிச்சீர் வருதலின் சீர் ஒன்றியதாயினும் ஒன்றாதாயினும் ஓசைகெடுதல் இல்லையாதலின் வஞ்சித்தளையும் கூற வேண்டா. எனவே வெண்சீர் வெண்டளையும் ஒன்றிய வஞ்சித்தளையும் ஒன்றா வஞ்சித்தளையும் சீர்களாலேயே ஓசை நிரப்பப்படுதலின் தளைவகை கூறவேண்டுவதில்லை. இனி, ஆசிரியத்தளையில் நேரொன்றிய நிலையாகவோ நிரை யொன்றிய நிலையாகவோ வரின் அவற்றானே ஆசிரிய ஓசை நிரப்பப் படலின் அதற்கும் தளை கூற வேண்டுவதில்லை. ஆனால் மாமுன் நிரையும் விளமுன் நேருமாக ஆசிரியச்சீர் சேர்ந்துவரின் தளை வெண் டளையாகிவிடுமாதலின் ஆசிரியப்பாவுக்குத் தளைவகை கூறியாக வேண்டும்.

# தளைமரபு

இவ்வகையில் சீர் மாறிவருவது வெண்பாத்தளை என ஒதுக்க வேண்டும். இனிக் காய்ச்சீர்முன் நிரைவரின் அது கலித்தளையாம். கலிப்பாவுக்குச் சீர் தனித்தில்லாவிடினும் வெண்சீரே தனக்குரியதாக வருதலின் அதற்குத் தளைவகை இன்னதென்று கூறியேயாக வேண்டும். இவ்வகையில் பார்க்கும்போது, வெண்பா ஒன்று மட்டும் தன் காய்ச்சீரான் வரின் தளை கூற வேண்டுவதில்லை என்பதும், வஞ்சிப்பாவுக்கும் சிறப்பாகத் தளை கூற வேண்டுவதில்லை என்பதும், ஆசிரியத்துக்கும் கலிக்கும் தளைவகை கூறியாக வேண்டும் என்பதும் பெறப்படும். ஆசிரியத்துக்கும் கலிக்கும் கூறியாக வேண்டும் என்பதால் மற்றைப் பாக்களுக்கும் தளைவகை கூறவேண்டுவதுமாயிற்று. இச்சூத்திரத்துக்கு இவ்வாறு கூறுவதே சிறக்கும்.

# ஆசிரியத்தளை

362. சீரியல் மருங்கின் ஓசை யொப்பின்

ஆசிரியத் தளையென் றறியல் வேண்டும். (53)

# ஆசிரியத்தளை

ஆசிரியச்சீர்களாகிய இயற்சீர்கள் சேர்ந்து வருமிடத்து இறுதியும் முதலும் ஆன அசைகள் ஒன்றாயிருப்பின் அஃது ஆசிரியத்தளை என்றறிதல் வேண்டும், அதாவது மாச்சீர் முன் நேரசையாய் வரின் நேரொன்றாசிரியத் தளையாம்; விளச்சீர்முன் நிரையசையாய் வரின் நிரையொன்றாசிரியத் தளையாம்.

“விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கண்”

இதில் விளங்கிழை - கருவிளம்; இதன் முன் ‘ பகிர் என நிரை வந்தது நிரையொன்றாசிரியத்தளை பகிர்ந்த - புளிமா; இதன்முன் ‘ மெய் என நேர் வந்தது நேரொன்றாசிரியத்தளை.

# புறனடை

363. குறளடி முதலா அளவடி காறும்

உறழ்நிலை யிலவே வஞ்சிக் கென்ப. (54)

# புறனடை

எழுத்தான் வரையறுக்கப்பட்ட குறளடி, சிந்தடி, அளவடி என்பனவற்றில் வஞ்சிச்சீர்வந்து கலக்கப்பெறா என்பர். பதினைந் தெழுத்து முதலாகவரும் நெடிலடி கழிநெடிலடிகளில் கலக்கப் பெறும் என்க.

# வெண்பாவடிகள்

364. அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய

தளைவகை ஒன்றாத் தன்மை யான. (55)

# வெண்பாவடிகள்

பத்தெழுத்து முதல் பதினான்கெழுத்தாக வரும் அளவடியும் ஏழெழுத்து முதல் ஒன்பது எழுத்தாக வரும் சிந்தடியும் சீரால் அமையும் தளை ஒன்றாவிடத்து வெண்பாவுக்குரியவாம். ஒன்றாமையாவது மாச்சீர் முன் நேர்வாராமல் நிரை வருவதும், விளச்சீர் முன் நிரை வாராமல் நேர் வருவதும் ஆம். இவ்வொன்றாத் தளையை இயற்சீர் வெண்டளை என்பர்.

# கலிப்பாவடி

365. அளவடி மிகுதி யுளப்படத் தோன்றி

இருநெடில் அடியுங் கலியிற் குரிய. (56)

# கலிப்பாவடி

பதினைந்து முதல் இருபது எழுத்தின்காறும் வரும் அளவடியும், நெடிலடியும், கழிநெடிலடியும் கலிப்பாவுக்குரிய.

"மரல்சாய மலைவெம்ப மந்தி யுயங்க"

இதில் பதின்மூன்றெழுத்தான் வந்தது. அளவடி. பிறவும் கொள்க.

# கலிப்பாவடி

பதினைந்து முதல் இருபது எழுத்தின்காறும் வரும் அளவடியும், நெடிலடியும், கழிநெடிலடியும் கலிப்பாவுக்குரிய.

# கலித்தளை

366. நிரைமுதல் வெண்சீர் வந்துநிரை தட்டல்

வரைநிலை இன்றே அவ்வடிக் கென்ப. (57)

# கலித்தளை

வெண்பாவுரிச்சீர் நிற்ப நிரைமுதல் வெண்சீர் வந்து நிரையாய்த் தளைத்தல் கலிப்பாவுக்குரியது என்பர். காய்ச்சீர்முன் நிரை வருவது கலித்தளையாம் என்றபடி.

(உ - ம்) அரிதாய அறனெய்தி

# ஒரூஉ நிலை

367. விராஅய தளையும் ஒரூஉ நிலை இன்றே. 58

# ஒரூஉ நிலை

எழுத்தெண்ணாமல் சீர் எண்ணிக் கூறப்படும் கலியடிக்குக் கலித்தளையோடு பிற பாத்தளையும் விரவிவருதலும் உண்டு.

(உ- ம் ) கலித்தொகைப் பாக்களிற் காண்க.

# ஆசிரியப்பாவில் வெண்பாவடி

368. இயற்சீர் வெள்ளடி ஆசிரிய மருங்கின்

நிலைக்குரி மரபின் நிற்பவும் உளவே. (59)

# ஆசிரியப்பாவில் வெண்பாவடி

ஆசிரியப்பாவில் இயற்சீரான் வரும் இயற்சீர் வெண்டளை வருவதும் உண்டு.

(உ - ம்) நெடுங்கயிறு வலந்த என்னும் அகப்பாட்டில் (30), “கடல்பா டொழிய இனமீன் முகந்து” என இயற்சீர் வெண்டளையே வந்த அடி வந்தது.

# வஞ்சியடியில் விரவல்

369. வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும்

ஐஞ்சீர் அடியும் உளவென மொழிப. (60)

# வஞ்சியடியில் விரவல்

இயற்சீர் வெண்டளை கலந்தும் ஆசிரியத்தளை கலந்தும் வந்த ஐஞ்சீரடி ஆசிரியப்பாவில் வருவனவுள,

(உ - ம்) "சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே " என்னும் பாட்டில் (135), “சிறுசோற் றானும் நனிபல கலத்தன் மன்னே” என வருவது காண்க.

சிறுசோற் றானும் - ஆசிரியத்தளை. றானும் நனி இயற்சீர் வெண்டளை.

# அறுசீரடி

370. அறுசீர் அடியே ஆசிரியத் தளையொடு

நெறிபெற்று வருஉம் நேரடி முன்னே. 61

# அறுசீரடி

ஆசிரியத் தளையோடு கூடிய அறுசீரடி நேரடிக்கு  முன்னாக வரப்பெறும்,.

(உ-ம்) “சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே" (புறம்.135)

என்னும் நேரடியின் பின்னர், “பெரியகட் பெறினே யாம்பாடத் தான் மகிழ்ந் துண்ணு மன்னே" என அறுசீரடி வந்தது.

# அறுசீரடி

இது ஆசிரியப்பாவில் வந்தது.

"தன்மை மடவார் தளர்ந்துகுத்த வெண்முத்தம்

புன்னை யரும்பேய்ப்பப் போவாரைப் பேதுறுக்கும் புகாரே எம்மூர்“

இதில் முன்னடி நேரடியாகப் பின்னடி அறுசீரடி வந்தது காண்க. இது கலிப்பாவில் வந்தது.

# எழுசீரடி

371. எழு சீர் அடியே முடுகியல் நடக்கும். 62

# எழுசீரடி

கலிப்பாவுக்குரிய சந்த அடியாகிய அராகவுறுப்படி எழு சீரடியால் வரும், எ - று.

( உ - ம் ) " தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை தழலெென விரிவன பொழில் ” இஃது எழுசீர் அராகவுறுப்பு. உலகு குளிர எமது மதியில் ஒழுகும் அமுத கிரணமே" ( முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ் - வருகைப்பருவம் ) என ஆசிரியப்பாவிலும் உறுப்பு என்பதின்றி எழுசீர் முடுகியல் வருவதுண்டு.

# சிறப்பு விதி

372. முடுகியல் வரையார் முதலிரண் டடிக்கும். (63)

# சிறப்பு விதி

எழுசீரில் வரும் முடுகியல் ஓசையானது ஐஞ்சீரடிக் கும் அறுசீரடிக்கும் வருதலை நீக்கார் என்பார் தொல்காப்பியர்.

# மூவகையடி

373. ஆசிரிய மருங்கினும் வெண்பா மருங்கினும்

மூவகை யடியு முன்னுதல் இலவே. (64)

# மூவகையடி

ஆசிரியப்பாவிலும் வெண்பாவிலும் ஐஞ்சீர் அறுசீர் எழுசீர் முடுகியலடிகள் வருதல் இல்லை,

# ஆசிரியத்துள் சிந்தடி

374. ஈற்றயல் அடியே ஆசிரிய மருங்கில்

தோற்ற முச்சீர்த் தாகு மென்ப. (65)

# ஆசிரியத்துள் சிந்தடி

ஆசிரியப்பாவின் ஈற்றயலடி முச்சீருடையதாகும் என்ப. ஆசிரியப்பாவின் இடையிலும் முச்சீரடி நீக்கார், (உ - ம்) “சிறியகட் பெறினே” என்னும் புறப்பாட்டில் காண்க. ‘நரந்த நாறுந் தன்கையாற்’ ‘இரப்போர் கையுளும் போகிப்’ ‘அருநிறத் தியங்கிய வேலே’ ‘சூடாது வைகியாங்குப் பிறர்க்கொன்’ எனவெல்லாம் வரும்.

# இடைவரை

375. இடையும் வரையார் தொடை உணர்வோரே. 66

# இடைவரை

ஆசிரியப் பாவின் ஈற்றயலடி முச்சீருடையதாகும் என்பர். அதுபோலவே, ஆசிரியப்பாவின் இடையிலும் முச்சீரடி வரும் என்று உறுதியாகக் கூறலாம். சான்றுகள் முன்னுள.

சிறியகட் பெறினே.

# கலிப்பாவில் முச்சீரடி

376. முச்சீர் முரற்கையுள் நிறையவும் நிற்கும்.  (67)

# கலிப்பாவில் முச்சீரடி

முச்சீரடி கலிப்பாவில் பயிலவும் நிற்கும். முரற்கை என்றது கலிப்பாவை. கலிப்பாவின் முதல் இடை கடை எனும் மூன்றிடத்தும் முச்சீரடி வரப்பெறும். இளம்பூரணர் நிறையவும் என்பதற்கு அதிகப்படவும் எனக் கொண்டு முச்சீர் நாற்சீராக நிறைந்து கலியுள்வரும் என்று கொண்டார். உதாரணமாக, "அரிமான் இடித்தன்ன" என்னும் பாலைக் கலியுள் (15) சுரிதகம், “முளைநிரை முறுவல் ஆயத்துள் எடுத்தாய்ந்த இளமையும் தருவதோ இறந்த பின்னே” என ஈற்றடி நாற்சீரான் வந்ததைக் காட்டுவர்.

# வஞ்சிப்பாவின் இறுதி

377. வஞ்சித் தூக்கே செந்தூக் கியற்றே. (68)

# வஞ்சிப்பாவின் இறுதி

வஞ்சிப்பாவின் இறுதியடி ஆசிரியப்பாவின் இறுதியடி போன்றது. அதாவது ஆசிரியச் சீரானும் தளையானும் வந்து ஈற்றயலடி முச்சீராகவோ, நாற்சீராகவோ முடிவது என்பதாம். *இளம்பூரணர்* வஞ்சிப்பாவின் இறுதி ஆசிரியப்பாவின் இயல்பிற்று என்றவாறு. தூக்கெனினும் இறுதியெனினும் ஒக்கும். செந்தூக்கெனினும் ஆசிரிய வீறு எனினும் ஒக்கும். செந்தூக் கியற்று என்றமையால் ஈற்றயலடி முச்சீரான் வருதலும் நாற்சீரான் வருதலுங் கொள்க *என்பார்.*

# வஞ்சிப்பாவின் இறுதி

(உ - ம்)” தொடியுடைய தோள்மணந்தணன்” என்னும் பாட்டுள்,

"இடுக ஒன்றோ சுடுக ஒன்றோ

படுவழிப் படுகவிப் புகழ்வெய்யோன் தலையே” (புறம். 239)

இதனுள் ஈற்றயலடி நாற்சீரான் வந்தது.

# வஞ்சிப்பாவின் இறுதி

"பூந்தாமரைப் போதலமர” என்னும் பாட்டுள்,

“மகிழ மகிழ்தூங் கூரன்

புகழ்த லானாப் பெருவண் மையனே” (யா.வி.ப.74) இதனுள் ஈற்றயலடி முச்சீரான் வந்தது.

# வெண்பா வீற்றடி

378. வெண்பா ஈற்றடி முச்சீர்த் தாகும்

அசைச்சீர்த் தாகும் அவ்வழி யான. (69)

# வெண்பா வீற்றடி

வெண்பாவின் ஈற்றடி முச்சீருடையதாகும்; அதன் இறுதிச்சீர் அசைச்சீரான் வரும். உதாரணம் பின்னர் வருமாறு.

# புறனடை

379. நேரீற் றியற்சீர் நிரையும் நிரைபும்

சீரேற் றிறூஉம் இயற்கைய என்ப. (70)

# புறனடை

வெண்பாவின் ஈற்றயற்சீர் நேரீற்று இயற்சீராயின் அது இறுதிச்சீராக நிரையையும் நிரைபையும் கொண்டு முடியும் இயல்பினது என்பர்.

(உ- ம்) வேண்டுதல் வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்கு

யாண்டும் இடும்பை யில." (குறள். 4)

அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி

பகவன் முதற்றே யுலகு." (குறள். 1)

# நிரையும் நேர்பும்

380. நிரையவண் நிற்பின் நேரு நேர்பும்

வரையின் றென்ப வாய்மொழிப் புலவர். (71)

# நிரையும் நேர்பும்

வெண்பாவின் ஈற்றயற்சீர் நிரையீற்றியற்சீர் நேரசையும் நேர்பசையும் முடியாதல் நீக்கும் நிலைமையின்று என்பர் வாய்மொழிப் புலவர்.

(உ - ம்) பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி

வாலெயி றூறிய நீர். (குறள். 1021)

# நிரையும் நேர்பும்

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல

தன்றே மறப்பது நன்று (குறள். 108)

வெண்பாவின் ஈற்றயற்சீர் காய்ச்சீராயின் இறுதிச்சீர் நேரும் நேர்புமாக வரும்.

# நிரையும் நேர்பும்

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்

இறைவ னடிசேரா தார் (குறள். 10)

இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்

பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு ((குறள். 5)

# கலிப்பாவின் இறுதி

38. எழுசீர் இறுதி யாசிரியங் கலியே. (72)

# கலிப்பாவின் இறுதி

எழுசீரான் இற்ற அடியாலும் வெண்பாவின் இறுதியாலும் கலிப்பா முடியும். அதாவது கலிப்பா ஈற்றயலடி முச்சீரான் அமைந்த ஆசிரியத்தானும் இறுதியடி முச்சீரானமைந்த வெண்பாவினானும் முடியும் என்பது உணர்த்தியவாறு.

# 6. யாப்பு

383. எழுத்து முதலா ஈண்டிய அடியிற்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்பென மொழிப யாப்பறி புலவர். (74)

# 6. யாப்பு

எழுத்தசை சீர்தளைகளைக் கொண்டு முடியும் அடிகளால் செய்யுள் செய்வோன் கருதிய பொருளை அமைத்து முடிப்பது யாப்பாம் என்று கூறுவர் யாப்பறிந்த புலவர்.

# யாப்பின் வகைகள்

384. பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே
அங்கதம் முதுசொல் அவ்வேழ் நிலத்தும்
வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்
நாற்பே ரெல்லை அகத்தவர் வழங்கும்
யாப்பின் வழிய தென்மனார் புலவர். (75)

# யாப்பின் வகைகள்

யாப்பு என்பது, சேர சோழ பாண்டியரின் எல்லையாகிய நான்கு பெரிய திக்குகளின் அகத்தவாகிய தமிழர் வழங்கும் யாப்புகள் பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுமொழி என்னும் ஏழ்வகையிலும் அமையும் யாப்புகளின் வழிவருவது என்பார் புலவர். யாப்புவகை ஏழ் என்பதாயிற்று

# யாப்பின் வகைகள்

அவை

1. பாட்டியாப்பு,
2. உரையாப்பு,
3. நூல் யாப்பு,
4. வாய்மொழியாப்பு,
5. பிசியாப்பு,
6. அங்கதயாப்பு,
7. முதுமொழியாப்பு

என்னும் பெயரின.

# 7. மரபு

யாப்பு மரபு என்பது இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்னும் நால்வகைச் சொல்லின் இயல்பினவாகிய யாப்பின்வழி வருவதே யாப்பு மரபாகும்.

# 8. தூக்கு – ஆசிரியத் தூக்கு

386. அகவ லென்ப தாசிரி யம்மே. (77)

# 8. தூக்கு – ஆசிரியத் தூக்கு

அகவல் என்னும் ஓசை ஆசிரியப்பாவுக்குரியதாகும்.

அகவுதல் - கூவுதல், அழைத்தல். ஆசிரியப்பாவின் ஓசை மயில் அகவுதல் போல் அற்றற் றொழுகும்.

# 8. தூக்கு – வெண்பாத்தூக்கு

387. அஃதன் றென்ப வெண்பா யாப்பே. (78)

# 8. தூக்கு – வெண்பாத்தூக்கு

அகவும் ஓசையுடையதன்று வெண்பாயாப்பு; எனவே செப்பும் ஓசையுடையதென்பதாம். வெண்பா செப்பலோசையுடையது.

# 8. தூக்கு – கலித்தூக்கு

388. துள்ளல் ஓசை கலியென மொழிப. (79)

# 8. தூக்கு – கலித்தூக்கு

கலிப்பா, துள்ளல் ஓசையது எனக் கூறுவர்.

ஒழுகுநடை - நீர் ஒழுதல் போலும் ஓசை நடை;

# 8. தூக்கு – வஞ்சித்தூக்கு

389. தூங்கல் ஓசை வஞ்சி யாகும். (80)

# 8. தூக்கு – வஞ்சித்தூக்கு

சீர்தொறும் தூங்கப்படும் ஓசை வஞ்சிப்பாவுக்குரியதாகும்.

# மருட்பாத் தூக்கில்லை

390. மருட்பா ஏனை இருசார் அல்லது

தானிது என்னுந் தன்மை யின்றே. (81)

